Registered No. M. 2330  'SIDDHANTHAM
Vol. 33—No. 3

# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 33 | விகாரி பங்குனி 1960 மார்ச் | இதழ் 3

உள்ளுறை



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3

தனிப்பிரதி ௬ண

## சமாஜக் கட்டிடம்

சமாஜத் தலைவர் திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம்.ஏ. அவர்களும், மணலி. திரு. சீனி. இராமகிருஷ்ண முதலியார், பி.ஏ. அவர்களும் அன்புடன் அளித்த நன்கொடைகளைக் கொண்டு சமாஜத்திற்காகச் சென்னை அந்திக்கடைத்தெருவில் (Evening Bazaar) வருவாயுள்ள மூன்று கடைகள் விலைக்கு வாங்கப்பெற்றுப் பத்திரமும் ஆவணக்களரியில் (Sub-Registrar Office) பதிவு செய்யப்பெற்றது என்பதைப் பெருமகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். அக்கட்டிடத்தைப் பயன்படுத்துவது பற்றியும், அதில் சமாஜ அலுவலகம், நூல் நிலையம் முதலியவை அமைக்கக் கட்டிடம் கட்ட நன்கொடை எழுப்புவதுபற்றியும் ஆலோசிப்பதற்குச் சமாஜச்செயற்குழுக் கூட்டம் இராயப்பேட்டை ஸ்ரீபாலசுப்பிரயணிய பக்தஜன சபையில் 13-3-60 ஞாயிறு காலை 9 மணித்துக் கூடும். செயற்குழுவினரை வருமாறு கேட்டுக்கொள்கிறோம். நன்கொடையாளர் இருவரையும் பாராட்டுவதற்காக ஒரு பொதுக் கூட்டம் 27-3-60 ஞாயிறு மாலை 4 மணிக்கு இராயப்பேட்டைச் சபையிலேயே கூடும். சமாஜ அங்கத்தினர்கள் இதையே அழைப்பாகப் பாவித்துக் கூட்டத்திற்கு வரவேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறோம். சமாஜக்கட்டிடம் எழுப்புதல், அதைப் பயன் படுத்தும் முறை இவைகளைப் பற்றிய கருத்துக்களைக் கூட்டத்திற்கு வரமுடியாத அங்கத்தினர் செயலாளர்களுக்கு எழுத்து மூலமாகத் தெரிவிக்கும்படியும் வேண்டுகிறோம்.

---

## சமாஜ நிகழ்ச்சிகள்

16-2-60 எறிபத்த நாயனர் திருநட்சத்திர விழா இராயபுரம் சிவசுப்பிரமணிய சுவாமி கோயிலில் இறைபணிக் கழகச் சார்பில் நடைபெற்றது. திரு. N. T. கிருஷ்ணசுவாமி, பி.ஏ., பி.டி. அவர்கள் சொற்பொழிவாற்றினர்கள். 23-2-60: சென்னை அருணசலேசுவரர் கோயிலில் 'காரிநாயனர்' 'கோச்செங்கட் சோழ நாயனர்' என்னும் பொருள்கள் பற்றி முறையே திருவாளர்கள் க. வடிவேலாயுதம், எம்.ஏ., டாக்டர் - மா. இராசமாணிக்கனர், எம்.ஏ., எல்.டி., எம்.ஓ.எல்., பிஎச். டி., இவர்கள் சொற்பொழி வாற்றினர்கள்.

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு

மலர் 33 | விகாரி பங்குனி 1960 மார்ச் | இதழ் 3

## ஞானமிர்தம்

(முருகவேள்)

ஞானமிர்தம் என்பது சைவசித்தாந்தச் செம்பொருள்களை விளக்கும் நூல்கள் பலவற்றுள் தலைசிறந்த ஒன்றாகும். இந்நூல் அகவற் பாக்களால் இயன்றது; சங்கச் செய்யுட்களைப் போன்று உயரிய நடையில் சொற்தோற்றுவாய் பொருட் சுவை நலங்கள் மிக்கு விளங்குவது; மேற்கோளும் ஏதுவும் எடுத்துக் காட்டும் முதலிய உறுப்புக்கள் அமைய, அளவை நெறி பிறழாமல் இடையிடையே தடைவிடைகள் தந்துகொண்டு, சிறந்த முறையில் கருத்துக்களை விளக்கிச் செல்வது. ஆசிரியர் மெய்கண்ட தேவரின் சிவஞானபோதம் தோன்றிய காலத்திற்கும் முற்பட்டது. பழைய சிவாகமங்களின் துணி பொருள்களை இனிய தமிழில் விளக்கும் முறையில் திருமூலர் திருமந்திரம் போன்ற சிறப்புடையதாய், அதனை அடுத்து வைத்துப் போற்றத் தகுந்த பெருமையுடையது.

" தன்மனைக் கிழத்தி அல்லதைப் பிறர்மனை
அன்னையில் தீரா நன்னர் ஆண்மை " 24

" பரதந் திரியம் கரைகழி பந்தம் " 19

" பேயே ஆயினும் பிரியின் இன்பம்
வாயா தென்றே மதியோர் அறைப " 53

"கொன்னே செய்யான் தன்நேர் இல்லான்"12

என்பன முதலிய பொருள்பொதிந்த இனிய சிறந்த வரிகள் ஞானமிர்தத்தைச் சேர்ந்தவை என்பது, தமிழிலக்கிய அறிவு ஒரு சிறிதாதல் வாய்க்கப் பெற்றுடையார் அனைவரும் அறிந்த செய்தியாகும்.

* * * *

சிவஞான சுவாமிகள் மேற்கோள்

ஆசிரியர் சிவஞான சுவாமிகள் தாம் இயற்றிய சிவஞான போதச் சிற்றுரை - பேருரைகளிலும் பிறவற்றிலும், இந்நூலினின்று ஆங்காங்கே மேற்கோள்கள் பல எடுத்துக் காட்டிச் செல்லுதலின், இந்நூலின் சிறப்பை நம்மனோர் நன்கினிதுணரப் பெறுகின்றோம். தமது சிவஞான போதப் பேருரையின் இடையிடையே விளக்க நேரும் தூலாருந்ததி நியாயம் - சற்காரியவாதம் - மனமொழி மெய்களால் வினை ஈட்டப்படுமாறு - ஆதியான்மிகம் முதலிய மூவகைத் துன்பங்கள் - அண்டங்களின் இயல்பு - அந்தக்கரணங்கள் அமைச்சரை ஒக்கும் எனவே ஏனைக் கருவிகள் ஏனைப் பரிசனங்களை ஒக்கும் என்றல் - முதலிய பல செய்திகளுக்குரிய சிறந்த சான்றுகளாக, ஞானமிர்தச் செய்யுட்களையே சிவஞான சுவாமிகள் மேற்கோள் காட்டியருள்கின்றார்:

> "சத்திநிபாதம் என்னும் சொல்லியல்பு சத்தியினது விழ்ச்சி என்றவாறு. நி என்பது ஏற்றமாக என்னும் பொருள் குறித்து நின்றதோர் இடைச்சொல். ஒரவைக்களத்தின் நடுவே ஒருகல் வந்து வீழ்ந்தால் அவ்விழ்ச்சி அவ் வவைக் களத் துள்ளாரை ஆண்டுநின்றும் அகல்விக்கும். அது போலச் சத்திநிபாதம் நிகழ்ந்த மாத்திரையே அஃது அவ் வான்மாவை மனைவி மக்கள் முதலிய உலகத் துழனியின் அச்சம் நிகழ்ந்து அவ்வுலக வாழ்க்கையினின்று வெரீஇப் போந்து உண்மைக் குரவனை நாடிச் செல்லுமாறு செய்வித்தலின், அவ்வொப்புமை தோன்றச் சத்தி நிகழ்ச்சி என்னாது சத்தி விழ்ச்சி என்றோதப் பட்டது"

எனச் சிவஞான சுவாமிகள் 'சத்தி நிபாதம்' பற்றிச் செய்தருளிய சிறந்த விளக்கத்துக்கு அடிப்படையாக அமைந்தது,

" ...அச்சத்தி நிபாதம் -
நிபாதம் என்றது யாவன் ஒருவன்
இடைக்கடி தொருபொருள் அடுத்துற வீழின்,
வெரீஇ அந்நிலை ஒரீஇ வேறிடம்
மருவும்; அற்றென நிமலன் பெருவலி
பதிப்ப, அறிவன் பவபயங் கதுவ
மதித்தனன் தேசிகன் மலரடி யடையும்;
மோக அனந்தர் முயல்வோர்க்கு அமோகன்
சத்தியின் அவனை உணர்த்தல்! மற்றது
கருமத்து ஒப்பின் அல்லதை
வருமாறு ஆங்கின்று மதிக்குங் காலே!" 69

எனப் போதரும் ஞானமிர்தப் பகுதியே யாகும் எனின், சிவஞான சுவாமிகளுக்கு இந்நூலின்பால் இருந்த பற்றும் பயிற்சியும் எத்துணைய என்பது எண்ணி யுணரப்படும்.

* * * *

'ஒரு சிறந்த கருத்தானது ஒரு பெரிய அருட்கொடையாகும். அதற்காக முதலிற் கடவுளும், பின்னர் அதனை முதன் முதலாகக்கூறி வெளியிட்டவரும், அடுத்துச் சிறிது குறைந்த- ஆனால் உளங்கொளத் தகுந்த பெரிய அளவில் - அதனை முதன் முதலில் நமக்கு மேற்கோளாகக் காட்டியவரும் நன்றி செலுத்தப் படுதற்குரியவர்கள் ஆவர்' ("A great thought is a great boon, for which God is to be first thanked, then he who is the first to utter it, and then, in a lesser, but still in a considerable degree, the man who is the first to quote it to us"—*Bovee*) என அறிஞர் ஒருவர் மொழிந்ததற் கேற்ப, ஞானமிர்த நூலினின்று மேற்கோள் காட்டி அதன் அருமைபெருமைகளை நம்மனோர் அறியச் செய்த சிவஞான சுவாமிகளுக்கு நாம் பெரிதும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம். ஏனெனில், சிவஞான சுவாமிகள் மேற்கோள் காட்டாதிருந்திருப்பின், ஞானமிர்தத்தின் பெருமையினை நாம் இத்துணை யளவுக்கு நன்கினிது அறிந்துகொண்டிருத்தல் இயலாதன்றோ?

* * * *

"ஞானமிர்தம் என்னும் தமிழாகமம்" என இந்நூலைத் தக்கோர்கள் பலரும் போற்றியுள்ளனர். ஆகமங்களை மத்தாகக் கொண்டு, உபதேசம் என்னும் வலிய கயிற்றினைப் பூட்டி, அறிவாகிய பெரிய கைகளால், அறியாமைக் கடலை முறுக வாங்கிக் கடைந்தமையால் எழுந்த 'வீடு பயக்கும் மெய்யுணர்வாகிய ஞான' அமிர்தம் போல்வது இந்நூல் என்னும் கருத்தமைய,

நாற்பெயர்க் காரணம்

"ஆகம மந்திின் ... ...
அருளுப தேச அரும்பெறல் நோன்ஞாண்
மதிமாத் தடக்கை கதுமெனப் பூட்டி
முறுக வாங்க மறுகுபு கலுழ்ந்து...
அச்சா றுழி எற்பட எழுதலின்
ஞாறு மிருதம் என்ப
ஆனச் செவ்வி மாநூற் பெயரே!" 6

எனப்போதரும் வரிகளால் இந்நூற் பெயர்க் காரணம் இனைய தென்பதும், இஃது ஆகமங்களின் அரிய கருத்துக்களையே இனிதெடுத்து விளக்கும் இயல்பின தென்பதும் செவ்விதில் தெளியப்படும்.

நூலின் சுவையும் சிறப்பும்

"தேனுடன் அமிழ்து கலந்தன்ன சுவைய!
அமிழ்தூண் அண்டரும் பெறற்கருந் தகைய!
தண்டாப் பிறவிப் பேரிடர் எறிப!
உரையுணர்வு கூடா வரகதி உய்ப்ப!
மதியோர் ஆறுது பருகுவ! பருகியும்
அமையாது நுவலும் அமைதிய! பாச
வல்லி வேர்அற நிமிர்ப! எல்லையில்
மலக்குறும்பு அறுப்ப! அறத்தின் வேலிய!
தனக்குநிகர் இல்லாத் தகைமைய! மனத்தின்
மாசறக் களைவ! தேசொடு நிவந்த!..." 32

என இந்நூலை அருளிச் செய்த வாகீச முனிவர், தமது அருளாசிரியர் திருமொழிகளைப் புகழ்ந்து போற்றுவதாக வரும் பகுதி, இந்நூலுக்கும் ஏற்ற பெற்றியில் இனிது பொருந்துவதாக உள்ள தெனலாம்.

ஞானமிர்தம் ஆகிய இந்நூல், அஞ்ஞானம் என்னும் பகையரசனை ஞானவேந்தன் வெற்றி கொள்ளும் சிறப்பினை,

மிக்க சுவை அமையப் பின்வருமாறு உருவக முறையில் உணர்த்துகின்றது: ஞானவேந்தன் தன் சென்னியில் ஞானமா முடியைத் தரித்துள்ளான். அதனில், அருளாசிரியனது திருவடியாகிய விலைமதிப்பரிய பெருமணி பதிக்கப் பெற்று ஒளிர்கின்றது. அவ்வேந்தன்பால் புத்தியே அமைச்சனாகப் பணி புரிகின்றது. மேலும் அவன், பற்றின்மையையே படை வீரராகவும், பொறுமையையே தேராகவும், அருளுபதேசத்தினையே குதிரையாகவும், அவாவறுத்தலையே யானையாகவும் கொண்டுள்ளான். அத்தகைய ஞானவேந்தன், அஞ்ஞானம் ஆகிய பகையரசன்மீது படையெடுத்து, அழுக்காறும் அவாவும் ஆகிய அவனது காவற்காட்டினை வெட்டி எறிகின்றான்; குடும்பப் பிணிப்பு ஆகிய அகழியினை இடித்துத் தூர்க்கின்றான்; தன்மதிப்பும் அகந்தையுமாகிய நெடிய மதிலைப் பொடியாக்குகின்றான்; இருவினையாகிய தலை நகரை எரிபரந் தெடுக்கின்றான்; இவற்றினாலெல்லாம், அஞ்ஞானப் பகைவன் தோற்றுத் தேய்ந்தொழிய, ஞானவேந்தன் வென்றியுற்று விளக்கம் பெறுகின்றான். இந்நிலையில்,

ஞான வேந்தனின் வெற்றி

"ஞான மாமுடி சுமந்த கோமகன்
பரமா னந்தப் பைதிரம்
வளையாச் செங்கோல் ஓச்சினன் நெடிதே!" 33

என ஞானமிர்தம், ஞானப்பேரரசனின் வெற்றியினைப் புறத்திணை இலக்கணத் துறைப்பொருட் கருத்துக்கள் அமையச் சுவை மிக நவிலும் முறை, பெரிதும் பாராட்டி மகிழத்தக்க தொன்றாகத் திகழ்கின்ற தன்றோ?

இங்ஙனமே, பசு எனப்படும் உயிரின் இயல்பைப் பயில்தொறும் நயனமையும் வகையில் ஞானமிர்தம் பின்வரும் முறையில் தெளிவுறுத்துகின்றது. "உடலில் அறிவாகிய உயிர் ஒன்றுளது; உடல் அறிவிலது ஆதலின், குடம்போல. அறிவிலதாகிய குடம் அறிவுடைய ஒருவன் இயக்க இயங்கும், இல்லையேல் வாளா கிடக்கும். அது போலவே, அசேதனமாகிய உடலும் சேதனமாகிய உயிர்

உயிரின் இலக்கணம்

இயக்கிய வழியே இயங்கும். இன்றேல் இயக்கமற்றுப் பிண மாக வீழ்ந்துபடும். இங்ஙனம் உடலின் இயக்கத்திற்குக் காரணமாய் நிற்பது எதுவோ, அதுவே புற்கலன் (உயிர்) எனத் தெளிக."

"உழிதரல் இயைந்த பழிதரு ஆகத்து
அழியா அறிவன் கழியான்; ஒழியாச்
சேதனம் அன்மையின், கடம்போல்; ஆகலின்
எய்யாது இயற்றியான் எவன்? அவன், பொய்யாப்
புற்கலன் என்க! ஒற்கமில் சேதனம்
அறிவு, வறிது அசேதனம் என்ன
நெறியறி புலவர் அறிவறி வகையே!"11

"நிலம் முதல் நாதம் ஈறாக உள்ள உலகனைத்தும் காரியப் பாடாக இருக்கின்றன. இறைவனோ அறிவு வடிவினனான தலைவன். ஆதலால், அவனுக்கு இவையனைத்தும் போகம் ஆதல் இல்லை. காரியப்பாடாக உள்ள தத்துவத் தொகுதி கள், தாமே தமக்குப் போகம் ஆகமாட்டா. தனக்குவமை இல்லாத தலைவனாகிய இறைவனும், இவற்றை ஒரு பயன் குறித்தன்றி வீணே படைத்திருக்க மாட்டான். எனவே, பாரிசேட அனுமானத்தால் பதிபசு பாசம் என்னும் மூன்ற னுள், எஞ்சி நிற்கும் பசுவாகிய உயிரின் பொருட்டே உலகம் படைக்கப்பட்டதாகல் வேண்டும்!"

"காரியம் காசினி யாதி; ஏரியல்
ஈசன் கருத்தா; இவற்கிது போகம்
ஆதல் செல்லாது! அகன்றுயர் கருமம்
தானே நுகர்தல் செல்லாது! ஆனது
என்னே? செய்தது என்னின், அன்றே
கொன்னே செய்யான் தன்நேர் இல்லான்!
பாரிசேடம் அதனிற் பரனுக்கு!
ஏரியல் பரன், பசு என்றறி இனிதே!"12

* * * *

இத்தகைய தத்துவ சாத்திரக் கருத்துக்களேயன்றிச் சாதாரண உலகியற் செய்திகளையும், சுவை துளும்ப நவிலுத லில் ஞானமிர்தம் இணையற்ற தொன்றாக இலங்குகின்றது: "உலகில் மக்கட்கு இன்ப துன்பமாக வருவன அவரவர் செய்த நல்வினை தீவினைகளே. நல்வினை தீவினைகள் ஒழிந்தால்

இன்ப துன்பங்களும் ஒழியும். பிறர் தமக்குச் செய்த நன்மையையும், தாம் பிறர்க்குச் செய்த நன்மையையும் அறிவால் ஆராய்ந்து பார்த்து, நமக்குரியதனை அவர்கள் கொடுத்தனர் என்றும், அவர்களுக்கு உரியதனை நாம் கொடுத்தோம் என்றும் எண்ணி, வாழ்வகையினை யுணர்ந்தொழுகல் அனைவர்க்கும் கடமை. 'தீதும் நன்றும் பிறர்தர வாரா' என்பதனைத் தெளியாத சிலர், தமக்கு வரும் துன்பங்களுக்குப் பிறரே காரணம் எனப் பிறழ எண்ணி நொந்துகொள்வர். நாயானது தன்மீது பட்ட குறுந்தடியை நோக்கிக் குரைத்துச் சினவாது, அதனை எறிந்த அறிவிலாச் சிறுவன் மாட்டே சினந்து குரையா நிற்கும். நாய்க்குள்ள இவ்வறிவு தானும் இன்றி, மக்கள் சிலர் தாம் எய்தும் துன்பங்களுக்குக் காரணமான தமது வினையினை நொந்து கொள்ளாமல், வீணே மனிதர் பிறரைப் பகைத்துக் கொள்வர். அவர்கள் மிகவும் இரங்கத் தக்கார்!"

உலகியற் செய்திகள்

"அளியரோ அளியர் தாமே! தெளியா
இளையோன் துரந்த குணில்வாய்ச் செல்லாது
இளையோற் சினவும் வளைவாய் ஞமலியின்
அளியரோ அளியர்! என்னை?
ஒளிகொள் காரணம் உன்னு தோரே" 36

* * * *

"நல்ல கருத்துக்களைப் பிறருக்குச் சொல்லுதல் சிறந்ததொரு செயலேயாம். எனினும், அங்ஙனம் சொல்லுங்கால் 'இவர் தக்கார்' 'இவர் தகுதியிலார்' என்று ஆராய்ந்து பார்த்துத் தகுதியுடையவர்கட்கே சொல்லுதல் வேண்டும். 'நன்றாற்றல் உள்ளும் தவறுண்டு அவரவர் பண்பறிந்து ஆற்றாக் கடை'. நீரினைப் பசுவானது பருகினாற் பாலாக மாறி நலஞ் செய்யும்; பாம்பொன்று பருகின் நஞ்சாக மாறித் தீங்கு பயக்கும்."

"நஞ்சே, பாம்புண் தீநீர் மாதோ!
அஞ்செஞ் சேதா உண் அறல் அமிழ்தே!
விஞ்சை வேந்தர் ஞானம் விடே,
வஞ்சர் ஞானம் வடுவொடு படுமே!" 49

(தொடரும்)

# அன்ருட வாழ்க்கையில் சைவ சித்தாந்தம்

[காஞ்சிபுரம், வித்துவான், தருமை ஆதீனத் தமிழ்ப்புலவர், சித்தாந்தக் கலைமணி, சி. அருணை வடிவேலு முதலியார்]

(மலர்-33; இதழ்-2; 62-ம் பக்கத் தொடர்ச்சி)

இவற்றிற்குமேல், 'உள்ள பொருளாய், அறிவாய், அறிவில்லாததாய் உள்ள ஆன்மா, அத்தன்மைகட்கு மாறுன, சூனியமும் அன்று ; உடம்பும் அன்று ; அத்தன்மைகளையுடைய பரம்பொருளேயாம்' எனின், "பரம்பொருள் அறிவே வடிவமாய் இருப்பது ஆதலின், அதற்கு அறியாமை உண்டென்பது பொருந்துமாறில்லை. ஆயின், உயிர், அறிவோடு அறியாமையும் உடையதாய்க் காணப்படுகின்றது. அதனை, ஒருகாலத்தில் எல்லாப் பொருளையும் ஒருங்கே யறியமாட்டாது, ஒரு காலத்தில் ஒருபொருளையே அறிந்தும், அவ்வாறு அறியுமிடத்தும் இடைவிடாது அறிதலின்றி விட்டு விட்டு அறிந்தும், அவ்வாறு அறிந்ததனையும் பின்னர் மறந்தும் வருதல் பற்றித் தெளியலாம். இன்னும் உயிர் அறிவித்தாலன்றித் தானே அறியமாட்டாது. அறியுங்காலும் அறியப்படும் பொருளில் அழுந்தி அதன் தன்மைத்தாகியே அறியும். பரம்பொருள் இவ்வாறன்றித் தானே விளங்குதல் பற்றிச் 'சொயம்பிரகாசம்' எனப்படுவதாயும், அறியப் படும் பொருளில் தோயாமை பற்றித் 'தூயது' எனப்படுவதாயும், எல்லாவற்றையும் ஒருங்கே அறிந்தபடியே அறிந்து நிற்பதாகலின், அத்தகைய பரம்பொருள் ஒருவாற்ருனும் உயிராதல் இல்லை" எனச் சைவ சித்தாந்தம் அறுதியிட்டுரைக்கும்.

"அறிந்தும், அறிவதே யாயும், அறியாது,
அறிந்ததையும் விட்டங் கடங்கி—அறிந்தது
எது?அறிவும் அன்ருகும்; மெய்கண்டான் ஒன்றின்
அதுவதுதான் என்னும் அகம்"

"ஒன்றென்ருப் பார்த்துணர்வது உள்ளமே"

"அறிவிக்க அன்றி அறியா உளங்கள்"

என்பன சிவஞானபோதம்.

இவ்வாற்றால், 'உயிர், மாயா காரியங்களாகிய கருவிகளும் அன்று ; மாயைக்கு அப்பாற்பட்ட பரம்பொருளும் அன்று; வேறு ஒரு தனிப் பொருள்' என்பது தெற்றென விளங்கும்

" .........அனைத்தும்—நின்றுஇன்று
தார்ப்பணம்போற் காட்டலாம் சார்மாயை நீஅல்லை ;
தற்பரமும் அல்லை; தனி "

என்பது சிவஞானபோதம். (தார்ப்பணம்=கண்ணாடி)

இவ்வாறு காட்டி வந்தன எல்லாம் நமது அன்றாட வாழ்க்கையில் நிகழும் நிகழ்ச்சிகளைக் கொண்டே உணரப் படுவனவாதல் காண்க. மற்றும் இவ்வாறு உணர்த்தப் படுவன பல, சைவ சித்தாந்தத்துள் உள்ளன என்பதனோடு இதனை நிறுத்திக் கொள்கின்றேன்.

## 3

இறுதியாகச் சொல்லவேண்டுவது, 'நாம் அன்றாட வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டுவது சைவ சித்தாந் தமே' என்பது.

சைவ சித்தாந்தத்தினை நாம் கற்பதும், கேட்பதும், நுட்பமாக ஆராய்வதும் சொற்பொழிவு செய்தற்கோ அல்லது பிற மதங்களை வலிமையாக மறுத்தற்கோ அன்று ; இயன்ற அளவில் அதனை நமது அன்றாட வாழ்க்கையில் கடைப்பிடித் தற்கே யாகும். அதனால், சைவ சித்தாந்தத்தில் தெள்ளி வடித்து எடுத்த பொருளாய் உள்ளது எது ? அதனை நாம் நமது அன்றாட வாழ்க்கையில் எப்படிக் கடைப்பிடிப்பது ? என்று பார்ப்போம்.

மதங்கள் பலவாயிருப்பினும், அவை அனைத்தையும், உண்மை கூறுவது (ஆத்திகம்) இன்மை கூறுவது (நாத்திகம்) என்னும் இரண்டு வகையில் அடக்கலாம். " உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து—அலகையா வைக் கப் படும் " எனத் திருவள்ளுவ நாயனார் அருளிச்செய்த வாறு, சமயங்களால், 'உண்டு' எனவும், 'இல்லை' எனவும் கூறி வாதிடப்படும் பொருள்கள் பலவாயினும், அவை எல்லாவற்றுள்ளும் முதன்மையானது கடவுட்பொருள்.

அதனை அடியோடு இல்லை என்றே மறுப்பது முழு நாத்திகம். அவ்வாறின்றிக் 'கடவுள் உண்டு' என்னுந் துணையே கூறி, அதன் முழுத் தன்மைகளையும் உடன்படாமல், உலகிற்கும் உயிர்கட்கும் உள்ள சில பல குறைகளை அதன்மேல் ஏற்றிக் கூறி, அதன் சிறப்பு இயல்புகளில் சிலவற்றை அல்லது பல வற்றை ஏற்றுக்கொள்ளாது மறுக்கும் மதங்கள் அரைகுறை நாத்திகம் அல்லது அரைகுறை ஆத்திகமாகும். அவ்வாறு நோக்குமிடத்துச் சைவ சித்தாந்தம் ஒன்றே முழு ஆத்திக மாய் உள்ளமை விளங்கும்.

'கடவுள் உண்டு' என்று கூறும் மதங்களுள், 'கடவு ளால் இந்த உலகம் ஆக்கவோ காக்கவோ அழிக்கவோ படாது; உலகம் தானே இயங்குவது; அதிற் கடவுள் இருந்துகொண்டு மக்களுக்கு அருள்புரிகின்றார்' என்றும், 'உலகம் தோன்றுதல் நிற்றல் அழிதல்களுக்குப் பல கார ணங்கள் ஒன்று கூடுதல் வேண்டும்; அவற்றுள் கடவுளது விருப்பமும் ஒன்று' என்றும், மற்றும் இன்னோரன்னவாகக் கூறுங் கூற்றுக்கள் உள்ளன. சைவ சித்தாந்தம் அவ்வாறு, 'கடவுட்பொருளை ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும்' என் னும் கட்டாயத்திற்காக ஒப்புக்கொள்ளாமல், உண்மையில் தன்னுடைய முதன்மையான கொள்கையே கடவுட்கொள்கை யாகக் கொண்டுள்ளது. அன்றியும், கடவுளது துணை, மாண வருக்கு ஆசிரியர் செய்யுந் துணை, அல்லது குடிமக்களுக்கு அரசன் செய்யும் துணை முதலியன போன்றுள்ளது என்று கூறாமல், 'உடம்பிற்கு உயிர் செய்யும் துணைபோன்றது' எனக் கூறுகின்றது. 'உலகின் ஒவ்வோர் அணுவின் இயக் கமும், கடவுளது அருளாலே நிகழ்கின்றது; கடவுளது அருளின்றி ஓர் அணுவும் அசையாது' என மொழிகின்றது. 'உயிர்கட்கு நிகழும் அறிவு நிகழ்ச்சியே, கடவுளது அருள் உடன் நின்று நிகழ்த்த நிகழும்' என்கின்றது. இதனால், "எல்லாம் உன் அடிமையே எல்லாம் உன் உடைமையே எல்லாம் உன்னுடைய செயலே" என்று சொல்லி, 'உயிர் இதனை மறந்து தனது அறிவிற்கும் செயலுக்கும் தன்னையே தலைவனாகக் கருதுவதே வினை' என விளக்கு

கின்றது. இவை அனைத்தையும் ஒருபாமாக மாத்திரம் கொண்டு கூறாமல், ஆராய்ச்சி முறையால் அளவைகளில் வைத்து உளங்கொள நாட்டுகின்றது.

" விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தறிந் தறியா ஆங்கவை போலத்
தாம்தம் உணர்வின் தமிஅருள் " (சிவஞானபோதம்)

" பொறிபுலன் கரணம் எல்லாம் புருடனால் அறிந்து ஆன்மாவை
அறிதரா அவையே போல ஆன்மாக்கள் அனைத்தும் எங்கும்
செறிதரும் சிவன்ற னாலே அறிந்திடும் " (சிவஞானசித்தி)

" காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின் " (சிவஞானபோதம்)

என்பன போன்றவற்றால், 'உயிர்க்கு அறிவு நிகழ்தலே இறைவன் திருவருளால் நிகழ்வது' எனச் சைவசித்தாந்தம் கூறுதலை அறியலாம்.

இங்ஙனமாகவே, 'நமக்கு யாதோர் அறிவு உண்டாயினும், நம்மால் யாதொரு செயல் நிகழினும், 'அஃது இறைவனது அருளானே நிகழ்வது' என்பது விளங்குதலால், 'அதனை அவ்வாறறிந்து, அவன் அருளில் அடங்கி நிற்றல் வேண்டும்' என்பதே சைவ சித்தாந்தத்தின் முடிந்த பொருள். இதனை எவ்வளவுதூரம் யாவர் தங்கள் அன்றாட வாழ்க்கையில் நடைமுறையில் கொண்டு நடக்கின்றார்களோ அவர்களே சைவ சித்தாந்தத்தினால் அந்த அளவு பயன் அடைந்தோராவர்.

தங்கள் உணர்வு நிலையே இங்ஙனம் ஆகப் பெற்றவர்களுக்கு, 'இதனை அவர்க்கு யான் செய்தேன்; அவர் இதனை எனக்குச் செய்தார்' என்னும் முனைப்புத் தோன்றாமல் 'எல்லாம் அவன் செயல்' என்னும் அருள்நிலை தோன்றும். அதனால், 'யான் எனது' என்னும் செருக்குநீங்கும். அது நீங்கவே, உலகில் சிலரை உறவென்றும், சிலரைப் பகை என்றும் எண்ணுதலும், அதுகாரணமாக விருப்பும் வெறுப்பும் கொண்டு, அவற்றிற்கேற்ற செயல்களைச் செய்தலும், செய்து அவற்றால் திரும்பத் தமக்குவரும் நன்மை தீமை

களை அடைதலும் இல்லாதொழியும். அதனோடு, தங்கள் வாழ்க்கை எவ்வாறு அமைந்திருப்பினும், அதனை ஆண்டவன் இட்ட பணியாக நினைத்து அமைதியுடனும் நேர்மையுடனும் செய்தலும் "எவ்வுயிரும் நீங்காது உறையும் இறை சிவன் என்று எவ்வுயிர்க்கும் அன்பாய் இரு"த்தலும் உண்டாகும். இத்தகைய அருள் உணர்வு அருகினமையாலேயே உலகில் கொடுமைகள் பலவும் நிகழ்தற்கு ஏதுக்கள் பல உளவாயின. எனவே, உலகில் அமைதியான வாழ்க்கைக்கும் சைவ சித்தாந்தச் செந்நெறியே நன்னெறியாதலை உணரலாம்.

இவ்வருள் நிலை முடிந்த நிலை. இந்நிலை வருதற் பொருட்டு மேற்கொள்ளப்படும் முன் நிலைகளே சரியை, கிரியை, யோகம் என்பன. அவை திருக்கோயில் வழிபாடு, அடியார் கூட்டம், ஆன்மார்த்த வழிபாடு முதலியனவாகும். சரியை, கிரியை இரண்டும் 'சிவதன்மம்' என ஒன்றாகச் சேர்த்தும் சொல்லப்படும். இச் சிவதன்மம், சிவயோகம், சிவஞானம் என்பவற்றால் 'நான்' என்னும் முனைப்பு நீங்கி அன்பே காரணமாக இறைவனை வழிபடுவார்க்கு அவ்விறைவன் தானேவந்து தலையளித்தாட்கொள்வான்; அதனால், எல்லா நலங்களும் வாய்க்கப்பெறும்.

"நல்லசிவ தன்மத்தால் நல்லசிவ யோகத்தால்
நல்லசிவ ஞானத்தால் நானழிய—வல்லதனால்
ஆரேனும் அன்புசெயின் அங்கே தலைப்படுங்காண்
ஆரேனும் காணா அரன்"

என்பது திருக்களிற்றுப்படியார். எனவே, நாம் நமது அன்றாட வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டுவது சைவ சித்தாந்தமேயாதல் இனிது விளங்கும்.

இவ்வாறே நமது அன்றாட வாழ்க்கையில் சைவ சித்தாந்தச் செந்நெறியினை, இயன்ற அளவு சரியை முதலிய நால் வகையினுள் எவ்வகையிலாயினும் கடைப்பிடித்து, நலம்பெற எல்லாம் வல்ல சிவ பரம்பொருள் நமக்கு அருள்புரிவதாக!

——

# திருமந்திரம்

(தருமையாதீன வித்துவான் - முத்து - சு. மாணிக்கவாசகர்,
ஆதீனப் பல்கலைக் கல்லூரி முதல்வர்)

திருமுறை பன்னிரண்டனுள் திருமந்திரமும் பதினொன்றாந் திருமுறையும் எண்ணற்ற பிழைகளுடன் இருக்கின்றன. அவற்றைத் திருத்தஞ்செய்து நல்ல பதிப்பாக வெளியிடுதல் சைவர்க்குள்ள தலையான கடமைகளுள் தலையானது. "சித்தாந்தம்" ஆசிரியரும், சிவபத்தி முதலியவற்றில் சாலச் சிறந்தவரும், என்பால் மெய்யன்பும் நட்பும் உடையவருமாகிய திரு. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ எல். அவர்கள், நேற்று வேலூரில், திருமந்திரங்களில் உள்ள பாடபேதங்களைக் குறித்துத் தொடர்பாகக் கட்டுரை எழுதிவரும் வண்ணம் தூண்டினார்கள். அவ்வாறே செய்ய இசைந்து முதலில் இதனை எழுதினேன். அறிஞருலகம் இதனது உண்மையை உணர்ந்து ஆவனசெய்க.

இப்போதுள்ள திருமந்திரப் பதிப்புக்கள் பற்பலவாகும். அவற்றுள் பாடபேதங்கள் மிகக்கொண்டு விளங்குவது சைவ சித்தாந்த சமாஜப் பதிப்பு. அப்பதிப்புள்ளும் ஒன்றே அத்தகையது. திருவாளர் - மு. அருணாசலம், எம்.ஏ. அவர்கள், புகழுடல்பெற்ற ம. பா. அவர்களது விருப்பத்திற்கு இசைந்து, பல ஏடுகளை ஒருங்குவைத்து நோக்கிச்செய்த ஆராய்ச்சி வெளியீடு அது. அதை மட்டும் வைத்துக் கொண்டு நல்லறிவாளர் பலர் ஒருங்குகூடித் தக்கபாடம் இவை என வரையறுத்து ஒழுங்கான பதிப்பொன்றை வெளியிடல் இன்றியமையாதது. அதற்கு இக்கட்டுரை ஒரு தூண்டுதல் ஆகும் என்று கருதித் துணிந்தெழுதுகின்றேன்.

திருமந்திரத்தில் இன்றைய பாடபேதங்களின் நிலைமையை அறியச் சிற்சில எடுத்துக் காட்டுக்களால் விளக்குவதே இம் முதற் கட்டுரை.

'இருக்கில் இருக்கும் எண்ணிலி கோடி
அருக்கின்ற மூலத்துள் அங்கே இருக்கும்

அருக்கனும் சோமனும் ஆரழல் வீச
உருக்கிய ரோமம் ஒளிவிடும் தானே '

என்றதில் அங்கே என்றது ' அங்கி ' என்றிருந்து கெட்டது. அங்கி - நெருப்பு. மூலாக்கினியைக் குறிப்பது அது.

' குருநிந்தை ' என்னும் தலைப்பில் மூன்றாவது பாடலாக

" பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்
சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவர்
அத்தமும் ஆவியும் ஆண்டொன்றில் மாண்டிடும்
சத்தியம் ஈது சதாநந்தி ஆணையே "

என்று உளது. இதில், குருவைப் பத்தினி பத்தர் என்று குறித்தல் பொருந்துமோ? பத்தினி பத்தர் என்றதன் பொருள் என்ன? பெண்டாட்டிதொண்டர் என்னும் பொருளினும் வேறு பொருள் உண்டோ? பெண்டாட்டிதொண்டர் சித்தம் கலங்கச் சிதைவுகள் செய்தவர்க்கு எய்தும் கேடுகளைச் சொல்லவோ இப்பாடல் தோன்றியது? குரு லட்சணங்களுள் பத்தினி பத்தியும் அடங்குமோ? ஒரு சிறிதும் ஆராயாமலேயே இது குற்றம் என்று துணிதல் சிற்றறிவினூர்க்கும் இயலும் அன்றோ? இப்பாடத்தைக் கொண்டுள்ள பதிப்புக்களும் குறிப்புரை முதலியனவும் ஏனையிடங்களில் எப்படி இருக்கும் என்று கருதி யுணர்தல் எளிதன்றோ?

' சத்தினிபாதர்கள் தத்துவ ஞானிகள் என்று இருந்து இந்நிலையை அடைந்துளது இது. மோனை நயம் முதலியனவும் இதன் உண்மையை நிலை நாட்டும்.

பா. 1923. பக்கம் 756-இல் 'ஆண் பெண் கலக்கும் காலத்திலும் விந்து வெளிப்படாமல் போகம் செய்வதுதான் சிவயோகம்' என்று உரையெழுதினர் ஒருவர். அதைக் கழகப் பதிப்பிற் காணலாம். இது சிவயோகம் ஆயின், இதைப் பெறவேண்டி மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கல் ஏன்? தோத்திரம் ஏன்? சாத்திரம் ஏன்? கோயில் ஏன்? மடம் ஏன்? குரு ஏன்? சீடர் ஏன்? பத்தினியும் அவள் பத்தனும் ஆதலே போதாதோ? இப்போகம் நாய் நரி முதலியவற்றிற்கும் உண்டா? இல்லையா? இது சிவயோகம் ஆகுமோ?

'மிகையில்லை' (1304) என்றது 'வினையில்லை' என்று மாறிற்று. 'ஆசற்ற சற்குரு அப்பரமாமே' (1574) என்றதில் 'அம்பலம் ஆமே' என்று உளது. 'அப்பரம்' என்றதே அங்கு இருத்தற்குரியது. அதற்குக் கண்ணிற்கண்ட குருவே காணாதசிவம் என்னும் பொருள் ஆகும். 'சிவகதியே கதி மற்றுள்ள எல்லாம் பவகதி' (1536) என்பதில் 'பகவதி' வந்து காட்சிதருவது சைவர்செய்த தவகதிபோலும்.

"சைவம் சிவனுடன் சம்பந்தம் ஆகுதல்
சைவம் தனைஅறிந்தே சிவம்சாருதல்
சைவம் சிவம்தன்னைச் சாராமல் நீங்குதல்
சைவம் சிவாநந்தம் சாயுச் சியமே"

என்பதில் மூன்றாவதடியில், 'அன்றி' என்று இருந்தது. அது 'தன்னை' எனக் கெட்டது. அக்கேடு சிவத்தைச், சாராமல் நீங்குதல் சைவம் என்று பொருள் பயக்கும்கேட்டுக்குக் காரணம் ஆயிற்று. சிவச்சார்பு இல்லாதது சைவம் ஆமோ? 'சிவம் அன்றி' என்னும் பாடம் உண்டு என்று அப்பதிப்பே காட்டுகின்றது. 'சைவம் பசுபாசம் சாராது நீவுதல்' என்று பிறிதொரு பாடமும் உள்ளது. (தொடரும்)

---

# மக்கீச்சுரம்

(தவத்திரு. சபாபதி சுவாமிகள்,
ஸ்ரீமத் மௌனசுவாமிகள் மடாலயம், சிதம்பரம்)

சோழ நாட்டில் குடந்தையம் பதியில் நிலைபெற்றுள்ள வீரசைவ ஞானபீடத்தில் அமர்ந்து சிவநெறி வளர்த்த அருட்குரவர்களில் முளையமல்லேசர் என்பவரும் ஒருவர். இப் பெரியார், பரதகண்டத்தில் தென்னாட்டிலும் வட நாட்டிலும் உள்ள சிவ தலங்கள்தோறும் சென்று வணங்கிச் சிவநெறி பரப்பும் திரு மடங்களை அமைத்து மக்கா நகரத்தை அடைந்தனரென்றும், அத்தலம் முற்காலத்தில் மக்கவீச்சுரம் எனப் போற்றப்பெறும் சிவதலமாக விளங்கிய தொன்மைச் சிறப்பு வாய்ந்ததென்றும், அங்குள்ள மசூதியிற் கட்டப்

பெற்றுள்ள பெரிய மணியே அதற்குச் சான்ருய் விளங்குவ தென்றும், அத்தலம் பிற்காலத்தில் மகமதிய மக்களின் புண் ணிய தலங்களுள் தலைமை யுடையதாகப் போற்றப்பெறும் நிலைமை எய்தியதென்றும், முளையமல்லேசர் மக்கீச்சுரப் பெருமானை வழிபட விரும்பி மக்கா நகரத்தையடைந்த பொழுது அம் மசூதியிலுள்ள மணி தானே ஒலித்ததென் றும், அது கண்டு முளையமல்லேசரின் பெருமையை யுணர்ந்த மகமதியர்கள் அவரை அன்புடன் வரவேற்றன ரென்றும், மல்லேசர் மக்கிச்சுரப் பெருமானை வணங்கி மகிழ்ந்ததுடன் சைவ சமயத்திற்கும் மகமதிய சமயத்திற்கும் தெய்வங் கொள்கையில் அமைந்த அடிப்படையாகிய ஒருமைப்பாடு விளங்கும் முறையில் 'ஒருவனே தேவன்' என்னும் உயர்ந்த கோட்பாட்டினை அங்குள்ளோர்க்கு மகமதிய மறைநூலி லிருந்து எடுத்துரைத்து அவர்களாலும் அங்கு வந்திருந்த தில்லி மன்னனும் பாராட்டப்பெறும் சிறப்பினைப் பெற் றுத் திரும்பினர் என்றும் 'வீர சிங்காதன புராணம்' கூறும்.

'வீர சிங்காதன புராணம்' என்பது, வீர நரசிங்கன் என்னும் வேந்தனது வேண்டுகோட் கிணங்கிச் 'சோமசேகர தேசிகர்' என்பவரால் கன்னடமொழியில் இயற்றப்பெற்ற புராணத்தின் தமிழ் மொழிபெயர்ப்பாகும். இதன்கண் பெரு மாத்தூர் மடம் வேலையசுவாமிகளும், கோட்டூர் உமாபாக தேவரும் பாடிய சருக்கங்கள் இடம் பெற்றுள்ளன. அவற் றுள் மேல் எடுத்துக்காட்டிய மழைய மல்லேசுரச் சருக்கம் முதலிய மூன்று சருக்கங்களையும் பாடியவர், கற்பனைக் களஞ் சியமெனப் போற்றப்பெறும் சிவப்பிரகாச சுவாமிகள் தம்பி யார் வேலைய சுவாமிகளாவர். கி. பி. 17-ஆம் நூற்ருண்டின ராகிய இப் புலவர் பெருமான், மகமதிய சமயத்தாரால் புண் ணிய தலமாகப் போற்றி வழிபடப்பெறும் மக்கா நகரத்தில் அமைந்த மக்கவிச்சுரமென்னும் திருக்கோயிலின் தொன்மை யமைப்பினையும் அதனையொட்டி மகமதியர்களால் வழிபடப் பெறும் மசூதியாகிய பள்ளி அமைந்திருத்தலையும்,

"பூருவந் தன்னின் மக்க வீச்சுர மெனப் பொலிந்தே
மேரு வொப்பென விளங்கிடுங் கோயில் பள்ளி யதாய்ச்

சாருமால்இது சான்றுநம் தம்பிரான் சபைமுன்
பாரிதாமணி தூக்கிடப் பட்டுறும் பரிவால்"
வீரசிங்காதன - மழைய மல்லேசச் சருக்கம் 84-ம் செய்யுள்.

எனவரும் பாடலில் தெளிவாகக் குறித்துள்ளார்.

இங்கே குறிக்கப்பெற்ற மக்கீச்சுரம் என்பது, திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய அடைவு திருத்தாண்டகத்தில் எடுத்துரைத்துப் போற்றப்பெறும் பழமையான சிவதலங்களுள் ஒன்றாகும். இவ்வுண்மை,

" நாடக மாடிடம் நந்திகேச் சுரம்
மாகா ளேச்சுரம் நாகேச்சுரம் நன்கான
கோடீச்சுரம் கொண்டீச்சுரம் திண்டீச்சுரம்
குக்குடேச்சுரம் மக்கீச்சுரம் கூறுங்கால்
ஆடகேச்சுரம் அகத்தீச்சுரம் அயனீச்சுரம்
அத்தீச்சுரம் சித்தீச்சுரம் அந்தண்கானல்
ஈடுதிரை இராமேச்சுரம் என்றென்றேத்தி
இறைவனுறை சுரம்பலவும் இயம்புவோமே (1-7-18)

எனவரும் திருப்பாடலாலும், " மக்கீச்சுரம் என்பது சிவத்தலமென்பதனைத் தேவாரம் அடைவு திருத்தாண்டகத்தானும் உணர்க " எனச் சிதம்பரம் ஈசானியமடம் இராமலிங்க சுவாமிகள் மேற்குறித்த வீரசிங்காதனப் புராணச் செய்யுளுக்கு எழுதியுள்ள அடிக்குறிப்பாலும் நன்கு தெளியப்படும். உலக நாடுகள் பலவற்றிலும் ஆங்காங்கே பழமையான சிவலிங்கத் திருவுருவங்கள் காணப்படுதலாலும், குமரி முதல் இமயம்வரையுள்ள சிவ தலங்களை நேரிற் சென்று கண்டு வழிபடும் உறுதியினைத் தம் வாலாற்றிற் செயற்படுத்திக் காட்டிய திருநாவுக்கரசர், இந்திய நாட்டினையடுத்து மேற்றிசையில் அமைந்துள்ளதும் ஆராய்ச்சியாளர் சிலரால் மேற்றிசைக் கயிலை எனக் கருதப்பெறுவதுமாகிய* மக்கா நகரத்தினுள்ள திருக்கோயிலைத் தாம் பாடிய அடைவு திருத்தாண்டகத்தில் 'மக்கீச்சுரம்' என்ற பெயராற் குறித்துப் போற்றியிருத்தல் இயல்பாக நிகழக்கூடியதே யாதலாலும், மக்கா

*காலஞ் சென்ற தமிழ்ப் பேராசிரியர்-இராவ்சாகிபு-மு. இராகவையங்காரவர்கள் இக்கருத்தினை அன்பர் சிலரிடம் தெரிவித்துள்ளார் என அறிகின்றோம்.

நகரத்திற் காணப்பெறும் சிவலிங்கத் திருவுருவம் அப்பரடிகள் காலமாகிய கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்கு முற்பட்ட தொன்மை வாய்ந்த தென்பது நன்கு துணியப்படும்.

இதுகாறும் எடுத்துக்காட்டிய குறிப்புக்களால் மகமதிய மக்களால் புண்ணிய தலமாக வழிபடப் பெற்றுவரும் மக்கா நகரத்திலேயே முற்காலத்திற் சிவநெறிச் செல்வர்களால் வழிபடப்பெற்ற சிறப்புடைய மக்கிச்சுரம் என்னும் திருக்கோயில் அமைந்துள்ளமை இனிது புலனும். இத்திருக்கோயிலில் அமைந்த சிவலிங்கத் திருவுருவம் மக்காவிலுள்ள மசூதியாகிய பள்ளியை யடுத்து இன்றும் மாருது அமைந்துளதென அறிகின்றோம்.

விகாரி, கார்த்திகை 8-ம் தேதி செவ்வாய்க்கிழமை (24–11–59) வெளிவந்த 'தினமணி' என்னும் செய்தித் தாளில் 4-ஆம் பக்கம் 5-ஆம் பத்தியில் பின்வருவமாறு ஒரு செய்தி வெளிவந்துளது :—

**மெக்கா மசூதியில் சிவலிங்கம்!**

புது டில்லி, நவ-23.

மெக்கா மசூதியில் ஒரு சிவலிங்கம் இருக்கிறது. அஸ்ஸாம் மெம்பர் ஸ்ரீ பி. வி. பரூவா இவ் விஷயத்தை இன்று லோக் சபையில் தெரிவித்தார். இந்தச் சிவலிங்கத்தைத் தரிசிக்க முஸ்லிம் அல்லாதாருக்கு வசதிகள் இருக்கவேண்டும். இந்திய சர்க்கார் சவூதி அரேபிய சர்க்காருடன் பேசி இதற்கு ஏற்பாடு செய்யுமா? என்று பரூவா கேட்டார்

மெக்காவில் சிவலிங்கம் இருப்பதுபற்றிச் சர்க்காருக்குத் தகவல் இல்லை என்று கலாசார மந்திரி ஸ்ரீ ஹுமாயூன் கபீர் கூறினர்.

செய்தித்தாளில் வெளிவந்த இச் செய்தி தமிழகச் சைவ மக்களின் சிந்தைக்குத் தெளிவு பயக்கும் நற்செய்தியென்பதிற் சிறிதும் ஐயமில்லை. திருநாவுக்கரசர் அருளிய அடைவு திருத்தாண்டகத்திற் போற்றப்பெறும் தேவார வைப்புத் தலங்களுள் 'மக்கிச்சுரம்' என்ற திருக்கோயில் மகம்திய சமயத்தாரின் புண்ணிய தலமாக மதித்துப் போற்றப்பெறும்

மக்கா நகரத்தில் அமைந்துளதென்பதும், அத் திருக்கோயிலில் எழுந்தருளிய மக்கீச்சுரப் பெருமானின் திருவுருவமாகிய சிவலிங்கம் இன்றும் அங்கு மாருது நிலைபெற்றுளதென்பதும், உலக நாடுகளின் பண்பாடுகள் அனைத்தையும் தொன்மை வரலாற்றுடன் ஒப்ப மதித்துப் போற்றிவரும் நம் பாரத அரசாங்கம், பாரத நாட்டின் பண்பாட்டிலும் சமயச் சார்பற்ற பொதுமை யுணர்விலும் மதிப்பும் நம்பிக்கையுமுடைய சவூதி அரேபிய அரசாங்கத்திற்குத் தனது வேண்டுகோளை முறைப்படி தெரிவித்தால் அவ்வரசாங்கம் அதற்கு இணங்கும் என்பதும், இந்திய அரசாங்கம் முயன்ருல் மக்கா நகரத்திலுள்ள மக்கீச்சுரப் பெருமானை இந்திய நாட்டவரில் மகமதியரல்லாத ஏனையோரும் கண்டு மகிழ்ந்து வழிபடும் வாய்ப்பினைச் சவூதி அரேபிய அரசாங்கத்திடமிருந்து எளிதிற் பெற இயலும் என்பதும், தினமணியில் வெளிவந்த மேற் குறித்த செய்தியால் நன்கு பெறப்படும்.

இவ்வாறே இலண்டன்மா நகரத்திலுள்ள செயின்ட் பால் கதீட்டிரலில் (Cathedral) சிவலிங்கத் திருவுருவம் உளதென்பது, இலண்டன்மா நகரத்திலிருந்து வெளிவரும் Rajpút என்ற மாதப் பத்திரிகையில் அதன் ஆசிரியரால் எழுதப்பெற்றுளது. தென்னுட்டவர் வணங்கும் சிவலிங்கத் திருவுருவம் சைவரல்லாதார் பெருக வாழும் வேற்றுநாடுகளில் ஆங்காங்கே காணப்படும் தொன்மை வாய்ந்ததாதலைக் கூர்ந்து நோக்குங்கால் சிவலிங்க வழிபாடு சமயங்கடந்த நிலையில் அமைந்த தனிச் சிறப்புடையதென்பது இனிது விளங்கும்.

திருநாவுக்கரசர் தேவாரத்திற் போற்றப்பெறும் மக்கீச்சுரப் பெருமானை வணங்க விரும்புவோர்க்கு மக்காநகரத்திற்குச் சென்று வழிபட்டுத் திரும்பவேண்டிய வாய்ப்பினைச் சவூதி அரேபிய அரசாங்கத்தின் இசைவுடன் அமைத்துத் தரும்படி இந்திய அரசாங்கத்தாரை வேண்டுவது சைவ நன்மக்கள் கடமையாகும்.

——

# அபிராமி அந்தாதியில் ஒரு பாடல்

(திரு. மு. அருணாசலம் அவர்கள், எம்.ஏ.)

**1**

உச்சித் திலகம்: திருக்கடவூர் அபிராமி பட்டர் பாடிய அபிராமி அந்தாதி, தேவியைத் துதிக்கின்ற ஒரு சிறந்த அருட் பாசுரம். எண்ணற்ற பக்தர்கள் தினந்தோறும் இதைப் பாராயணம் செய்து தேவியை வழிபடுகிறார்கள். வேண்டுவார் வேண்டும் வரங்கள் எய்துவிப்பது அப்பாசுரம் என்பது பக்தர்கள் தங்கள் வாழ்க்கையில் கண்ட உண்மை.

அந்தாதியின் முதற்பாடல் பின்வருவது:

"உதிக்கின்ற செங்கதிர் உச்சித் திலகம் உணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்கம் மாதுளம் போது மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடி மென்கடிக் குங்கும தோயமென்ன
விதிக்கின்ற மேனி அபிராமி என்றன் விழுத்துணையே."

இதன் பொருள்: உதிக்கின்ற செங்கதிரவனும், உச்சித் திலகமும், மணியை மதிக்கும் அறிவுடையவர்கள் மதிக்கின்ற மாணிக்க மணியும், மாதுளை மலரும், மின்னற் கொடியும், மென்மையான மணம் பொருந்திய குங்குமக் குழம்பும் போன்றது என்று நூல்கள் விதிக்கின்ற சிவந்த திரு மேனியை உடையவளும் செந்தாமரையில் வாழும் திருமகள் துதி செய்கின்றவளுமாகிய அபிராமி அம்மை என் உயிருக்குச் சிறந்த துணையாவாள்.

இந்நூலுக்கு முன்னர்ப் பொருள் செய்தவர்கள் "உச்சித் திலகம்" என்னும் தொடருக்குப் பொருள் காணும்போது இடர்ப்பட்டிருக்கிறார்கள். ஸ்ரீ ம. க. வேற் பிள்ளை "உச்சித் திலகம்" என்பதற்கு மஞ்சாடிப்பூ என்று பொருள் செய்தார். ஸ்ரீ கி. வ. ஜகந்நாதன், நெற்றியில் அணியும் சிந்தூரத் திலகம் என்று பொருள் கூறி, 'திலகம் என்பது சிந்தூரத்திலகம் என்றும், இதற்கு ஆதாரமாக அபிராமி அந்தாதிப் பாடல்கள் பலவற்றில் "சிந்துர வண்ணப் பெண்ணே" என்று பயின்றுள்ள தென்றும் காட்டியிருக்கிறார். இதன் பின் வெளிவந்த கோவூர் இராமநாதப் பிள்ளை வெளியிட்ட குறிப்புரையுடன்

கூடிய பதிப்பில், உச்சி நேரத்தில் மலர்கின்ற மஞ்சாடிப்பூ என்று குறிப்பிடுகிருர். இந்தப் பதிப்பு என்னுடைய பார்வையில் வெளிவந்தது. பரம்பரையாக அந்தாதி பயின்ற பக்தர் பலர் இந்தப் பொருள் கூறி நான் கேட்டிருந்தேன். ஸ்ரீ தண்டபாணி தேசிகர் எழுதிய விருத்தியுரையில், மஞ்சாடி மலர் என்று கூறி, "மங்கல மகளிர் உச்சியிலணியும் குங்குமப் பொட்டுமாம்" என்று குறிப்பெழுதியிருக்கிருர். பிறகு வெளிவந்த ஸ்ரீ முத்து சு. மாணிக்கவாசக முதலியார் பதிப்பில் "உயர்வாகிய மஞ்சாடி மலர்" என்று கூறி, "கதிரோனுச்சியிலிருக்கும் திலகமுமாம்" என்றும் குறிப்பிட்டிருக்கிருர். இப்பொருள் வேறுபாடுகளுக்குள் உண்மையான கருத்து யாது என்று காண்பதே இக்குறிப்பின் நோக்கம்.

தமிழ் நாட்டில் பெண்கள் நெற்றியில் திலகம் அணிவது மரபு. வடநாட்டில் சுமங்கலிக்கு அடையாளமாக, நெற்றிக்கு மேல், தலையின் உச்சியில், குங்குமத் திலகம் அணிவது புனிதமான மரபாக உள்ளது. சிறப்பாக வங்காளப் பெண்களிடையே இதை மிகுதியாகக் காணலாம். ஆதலால் உச்சித் திலகம் என்பதற்கு "உச்சியிலணிகின்ற பொட்டு" என்று பொருள் கொள்வதில் தவறில்லை.

ஆனல் ஒரு குறைபாடு. அம்மையினுடைய திருமேனியின் தன்மையை உவமைகளால் விளக்கவந்த ஆசிரியர் முறையாகச் செங்கதிர், திலகம், மாணிக்கம், மாதுளம் போது, குங்கும தோயம் என்பவற்றைக் குறிப்பிடுகின்ருர். இப்பொருள்கள் யாவும் அம்மை திருமேனியின் செம்மை நிறத்துக்கு உவமைகளாகும். மின்கொடி மட்டும் ஒளியைச் சுட்டும். செங்கதிரவன், சிவந்த திலகம், மாணிக்கம், மாதுள மலர், குங்கும தோயம்—இவை யாவும் சிவந்த நிறமுடையவை, பிரகாசம் பொருந்தியவை. குங்கும தோயம் என்று பெயர் குறிப்பிட்டுக் குங்குமம் சொல்லியிருக்கும்போது, முதலிலும் குங்குமத்தையே திலகம் என்று குறிப்பிட்டு, ஒரே பாடலில் குங்குமத்தை இரண்டுமுறை உதாரணமாக ஆசிரியர் காட்டினர் என்பது அவருக்குப் பெருமையன்று. ஆதலால் திலகம் என்பதற்குக் குங்குமச் சிந்தூரம் என்று பொருள்கொள்வது

சிறப்பன்று. சிந்தூரம் எனுல் சிவப்பு நிறம்; குங்குமம் சிவப்பு நிறமுடைமையால், குங்குமப் பொட்டு சிந்தூரமாயிற்று. ஆகவே சிந்தூரம் என்றுலே பொட்டாகாது. மேலும், ஆசிரியர் இங்குச் சாமானிய மக்களுக்கு எளிதில் விளங்கி வருகின்ற நிறமும், ஒளியுமுடைய பொருள்களையே குறிப்பிடுகின்ருர். செங்கதிர், மாணிக்கம், மாதுளம்போது என்பவை இப்படி ஆதலால், திலகமும் எல்லோருக்கும் நன்கு விளங்கிய பொருளாதல் வேண்டும். திலகம் என்பது மஞ்சாடி. பண்டைய உரைகள் இதைக் கூறும். "உச்சித் திலகம்" என்பதன் பொருள் உச்சி நேரத்தில் மலர்கின்ற மஞ்சாடி. மஞ்சாடி என்பது பெரிய காட்டுமரங்களுள் ஒன்று; மர வேலைக்கு ஏற்றது; கெட்டியான மரம்; அதன் வைரம் கருஞ் சிவப்பு நிறமானது. மலையாளத்தில் பிராமணர்கள் மஞ்சாடி வைரத்தைக் கல்லில் உரைத்து, நெற்றியில் திலகமாக இடுவார்களென்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

ஆனுல் மஞ்சாடி மலர் என்பது பிழையென்றே தோன்றுகிறது. மலர் வெண்மையும் மஞ்சளுமான நிறமுடையது. ஆகவே சிவப்பைக் கூறவேண்டிய பாடல் இதைக் குறிப்பிட்டதாகாது. மஞ்சாடியின் விதை எல்லோருக்கும் தெரியும். "ஆனைக்குன்றுமணி" என்றும் சொல்லுவார்கள். இதைத் தங்கம் நிறுக்க உபயோகிக்கிருர்கள். மஞ்சாடி என்பது இரண்டு குன்றிமணி எடை.

இம் மஞ்சாடி விதை மிக்க பிரகாசமான செந்நிறமுடையதென்பது அனைவரும் அறிந்தது. ஆகவே உச்சித்திலகம் என்பது "உச்சி நேரத்தில் மலர்கின்ற பூவுடைய மஞ்சாடி மரத்தின் பிரகாசமான செந்நிறமான விதை" என்று பொருள் கொள்ளுதலே சிறப்பு.

## 2

நூற்பயன்: அபிராமியந்தாதியின் இறுதியில், நூற்பயன் கூறும் பாடல் பின்வருவது:

ஆத்தாளை எங்கள் அபிராம வல்லியை அண்டமெல்லாம்
பூத்தாளை மாதுளம் பூநிறத் தாளைப் புவிஅடங்கக்

காத்தாளை அம்புச பாசாங் குசமும் கருப்பும் அங்கை
சேர்த்தாளை முக்கண்ணி யைத்தொழு வார்க்கொரு தீங்கில்லையே.

இப்பாடலில் "அம்புச பாசாங்குசமும் கருப்பும் அங்கை" என்பது நான்கொண்ட பாடம். இப்பகுதியின் சரியான வடிவம், முன் பதிப்பித்தவர்கள் ஒருவர் கூறியபடி ஒருவர் கூறவில்லை. 1833 - இல் அச்சிட்ட சரவணப் பெருமாளையர் பதிப்பு முதல் "அங்குச பாசாங்குசமும்" என்று பலர் அச்சிட்டிருக்கிறார்கள். இது அங்குசத்தை இருமுறை கூறுகின்றபடியால் பிழை என்பது வெளிப்படை.

மேலும், அம்மையின் திருக்கைகளில் பாசம், அங்குசம், கரும்புவில், மலர்க்கணை ஆகிய நான்கும் உள்ளன என்பது ஐதிகம். "அங்குச பாசாங்குசம்" என்ற பாடம், மலரை விட்டுவிடுகிறது ; ஆகவே இதனாலும் பிழை.

ஸ்ரீ கி.வா.ஜ. பதிப்பு, "ஊகித்து அறியப்பட்டது" என்று கூறி "அங்குச பாசாங் குசுமங் கரும்பு மங்கை" என்ற பாடம் கொள்கிறது. கருத்தில் பிழையில்லை. ஆனால் "பாசாங்குசம்" என்பது எல்லோர் நாவிலும் பயிலும் தொடர் ; அபிராமி அந்தாதியில் மட்டுமல்ல (அந்தாதி 2-ஆம் பாடல்) ; கந்தர் சஷ்டி கவசம் போன்ற பல பாராயண நூல் களில் எளிமையாக வழங்குகிறது. ஆகவே, இத்தொடரை, "பாசாங்குசுமம்" என்று மாற்ற வேண்டுமா என்பது கேள்வி. குசுமம் - பூ ; சிறப்புப் பற்றித் தாமரை. இது மலர்க் கணையைக் குறிக்கும். ஆனால் குசுமம் என்பது எளிய சொல்லன்று.

ஸ்ரீ தண்டபாணி தேசிகர் பதிப்பு "அங்கையிற் பாசாங் குசமும் கருப்பு வில்லும்" என்ற பாடம்கொண்டிருக்கிறது. இது பாடமாக இருக்கத் தடையில்லை ; ஆனால் அம்மையின் திருக்கரத்தில் சாமானியமாய் உள்ள மலரை (மலர்க் கணை யாகிய தாமரையை) இது குறிப்பிடவில்லை.

மிகச் சமீபத்தில் வெளிவந்த ஸ்ரீ முத்து. சு. மாணிக்க வாசக முதலியார் பதிப்பில் "ஐங்கணை பாசாங்குசமும் கரும்பும் அங்கை" என்று காணப்படுகிறது. "அங்கை எனப் பின் வருதலாலும் ஐங்கணையைக் கூறல்வேண்டுவதாலும்...

மற்றேருரையில் சொல்லின்றித் தாமரை எனப் பொருள் கூறியதாலும் இவ்வாறு இதில் கொள்ளலாயிற்று" என்பது இவர் குறிப்பு. தாமரை என்று பொருள் கூறுவது மரபு என்று இதிலிருந்து விளங்குகிறது.

இத்துணை வேறுபாடுகளை அறிந்தபின் தொடக்கத்தில் கண்ட பாடலில் உள்ள பாடத்தின் பொருத்தம் விளங்கும். "அம்புச (ய) பாசாங்குசமும் கருப்பும், அங்கை" என்றமையால், அம்புயமாகிய தாமரையைக் கூறவே மலர்க் கணையும், அங்கை என்றபடியால் திருக்கரங்களும் கூறியவாருயிற்று.

எனவே இப் பாடமே மற்றவற்றினும் பார்க்க உண்மைப் பாடமாயிருத்தல் வேண்டும். இது என்னுடைய ஊகமன்று; பண்டைப் பெரியோர் வாய்மொழியாகவே தோத்திரம் சொல்லும்போது கேட்டறிந்தது.

---

# திருப்பாலைவனம்*

("சைவநெறிக் காவலர்" டாக்டர்-திரு. மா. இராசமாணிக்கனார் அவர்கள், எம்.ஏ., எல்.டி., எம்.ஓ எல்., பிஎச்.டி.)

திருப்பாலைவனம் செங்கற்பட்டு மாவட்டத்தின் வட பகுதியில் கடற்கரைக்கு ஏறத்தாழ ஐந்துகல் தொலைவில் உள்தள்ளி இருக்கும் சிற்றூராகும். ஆலங்காடு, ஆர்க்காடு, வேற்காடு என்று இன்று அழைக்கப்பெறும் ஊர்கள் அமைப்புண்ட இடங்கள் பண்டைக்காலத்தில் முறையே ஆலங்காடு, ஆர்க்காடு, வேற்காடுகளாக இருந்தவையாகும். இவ்வாறே (திருப்) பாலைவனம் என்னும் இவ்வூர் அமைந்த இடம், பண்டைக் காலத்தில் பாலைமரக்காடாக இருந்தது. இன்றும் கோவிலில் பாலைமரம் உள்ளது இதனை வலியுறுத்துவதாகும்.

---

*1929-ஆம் ஆண்டுக் கல்வெட்டு அறிக்கையில் (எண் 307-377) 74 கல்வெட்டுக்கள் திருப்பாலைவனத்தைச் சேர்ந்தவை. இக்கல்வெட்டுச் செய்திகளையும் இவைபற்றிக் கல்வெட்டறிஞர் அவ்வறிக்கையில் எழுதியுள்ள செய்திகளையும் துணையாகக் கொண்டே இக் கட்டுரை எழுதப்பெற்றது.

கோவிலின் சிறப்புக் கருதித் ' திரு ' என்னும் அடைமொழி ஊர்ப் பெயருடன் சேர்த்து வழங்கப்பெறலாயிற்று.

## கல்வெட்டுக்கள்

இவ்வூர்ச் சிவன் கோவிலில் 71 கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இந்த 71 கல்வெட்டுக்களுள் தமிழ்க் கல்வெட்டுக்கள் 65 ; தெலுங்குக் கல்வெட்டுக்கள் 3 ; வடமொழிக் கல்வெட்டுக்கள் 2 ; கன்னடக் கல்வெட்டு 1. இவற்றுள் சில கல்வெட்டுக்கள் சிதைந்து உள்ளன. அதனால் அவை இன்ன காலத்தில் தோன்றின என்பதும், இன்ன செயலுக்காகத் தோன்றின என்பதும் புலப்படவில்லை.

எஞ்சியுள்ள கல்வெட்டுக்களில் 41 கல்வெட்டுக்கள் சோழர் காலத்தவை; 3 பாண்டியர் காலத்தவை; நெல்லூர்ப் பகுதியை ஆண்ட (சோழர்க்கடங்கிய) சிற்றரசரான தெலுங்குச் சோழர் கல்வெட்டுக்கள் 12 ஆகும். விசயநகர வேந்தர் காலக் கல்வெட்டுக்கள் 3; காகதீய அரசனான பிரதாபருத்திர தேவன் கல்வெட்டு 1. எனவே, 71 கல்வெட்டுக்களுள் 61 கல்வெட்டுக்கள் இன்ன இன்ன காலத்தவை என்பதை நாம் எளிதில் அறியலாம். இனி இவற்றைக் கால முறைப்படி காண்போம் :

### பேரரசர்

(1) திரிபுவன சக்கரவர்த்தி வீர ராசேந்திரதேவர் (கி. பி. 1064 - 1069)

(2) ,, ,, குலோத்துங்க சோழதேவர் I (கி. பி. 1070 - 1122)

(3) ,, ,, விக்கிரம சோழதேவர் (கி. பி. 1122 - 1135)

(4) ,, ,, குலோத்துங்க சோழதேவர் II (கி. பி. 1135 - 1150)

(5) ,, ,, இராசராச தேவர் II (கி. பி. 1146 - 1173)

(6) ,, ,, இராசாதிராச தேவர் II (கி. பி. 1163 - 1179)

(7) திரிபுவன சக்கரவர்த்தி குலோத்துங்க சோழதேவர் III
(கி. பி. 1178 - 1218)
(8) ,, ,, இராசராச சோழதேவர் III
(கி. பி. 1216 - 1246)
(9) ,, ,,சடையவர்மன் சுந்தர பாண்டியதேவர்
(கி. பி. 1251 - 1271)

### சோழர்க்கடங்கி நெல்லூரை ஆண்ட சிற்றரசர்கள் :

(1) தம்முசித்தி (மூன்றும் குலோத்துங்கன் காலம்)
(2) திருக்காளத்தி தேவன் கண்ட கோபாலன்(ஷை காலம்)
(3) இராசராச கண்ட கோபாலன் (இராசராசன் IIIகாலம்)
(4) விஜயகண்ட கோபாலதேவர்(இராசேந்திரன் IIIகாலம்)

### சம்புவராயர்

இராசநாராயண சம்புவராயர் (சோழர்க்குப் பிற்பட்ட காலம்)

### விஜயநகர வேந்தர்கள்

(1) சாயன உடையார் (வீரசாயன உடையார்)—முதல் கம்பணதேவர் மகன் ; கி. பி. 1347-இல் பட்டம் பெற்றவர்.
(2) மகா மண்டலலேசுர புக்கராயர் (கி. பி. 1350 - 1379)
(3) குமார புக்கராயர் (இரண்டாம் ஹரிஹரர் மகன்
(கி. பி. 1377- 1404)

### காகதீய அரசன்

மகாமண்டலேசுவர பிரதாப ருத்திரதேவர் (குலோத்துங்கன் III காலம்)

சில கல்வெட்டுக்களில் சக ஆண்டு 1272, 1356, 1681 என்பவை காணப்படுகின்றன.

### கல்வெட்டுக்களின் காலம்

இக்கல்வெட்டுக்களின் காலத்தை நோக்கும்போது, திருப்பாலைவனத்துச் சிவன்கோவில்கி.பி.11-ஆம் நூற்றுண்டு முதல் 18-ஆம் நூற்றுண்டு முடிய—ஏறத்தாழ 800 ஆண்டு

கள் சிறப்புற்ற நிலையில் இருந்தமை தெரிகிறது. கி.பி. 7 முதல் 9-ஆம் நூற்றாண்டுவரை வாழ்ந்த நாயன்மாரால் இத்தலம் பாடப்பெறவில்லை. எனவே, இது சோழர் காலத்தில் தோன்றிய திருக்கோயில் என்று கொள்ளுதல் பொருத்தமாகும்.

## கோவில் திருப்பணிகள்

சோழர் காலத்துத் தமிழகத்தில் கோவில் திருப்பணிகள் மிகுந்து விளங்கின. பேரரசர், சிற்றரசர், அரசாங்க அலுவலர், உழவர், வணிகர், தேவரடியார் முதலிய பலரும் சைவ சமயத் திருப்பணியில் ஈடுபட்டு இருந்தனர். இந்த நிலை திருப்பாலைவனத்திலும் இருந்தது என்பதைப் பல கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன.

சோழர்கால மக்களும் பிற்கால மக்களும் (மன்னர் உட்பட அனைவரும்) திருப்பாலைவனக் கோவிலுக்குச் செய்த திருப்பணிகள் யாவை?

**1. விளக்கு எரித்தல்:** கோவிலில் விளக்கு எரிக்க மக்கள் பணம், ஆடுகள், பசுக்கள், எருமைகள், நிலம் முதலியவற்றை வழங்கினர். கோவிலில் விளக்கு எரித்தல் பற்றிய கல்வெட்டுக்களே ஒவ்வொரு கோவிலிலும் மிகுதியாகக் காணப்படுகின்றன. எனவே, கோவிலில் விளக்கெரித்தல் சிறந்த அறப்பணியாகக் கருதப்பட்டது என்பது தெரிகிறது அன்றோ?

கோவிலில் பலவகை விளக்குகள் எரிக்கப்பட்டன. அவை (1) சாதாரண விளக்கு, (2) நந்தாவிளக்கு, (3) சந்தி விளக்கு, (4) பாதி விளக்கு எனப் பலவகைப்பட்டன. (1) சாதாரண விளக்கு என்பது பூசை நேரங்களில்மட்டும் ஏற்றப்படும் விளக்கு எனக் கொள்ளலாம்; (2) நந்தா விளக்கு என்பது எப்பொழுதும் எரிந்துகொண்டிருக்கும் விளக்காகும். (3) சந்தி விளக்கு என்பது காலை மாலைச் சந்திகளில் மட்டும் எரிக்கப்படுவது போலும்! (4) பாதிவிளக்கு என்பது பற்றிய விவரம் புலப்படவில்லை. ஒரு விளக்குக்கு உரிய தானம்செய்ய இயலாதவர் இருவர் சேர்ந்து பாதி—பாதி விளக்குக்குரிய தானம் செய்யும் வழக்கம் அக்காலத்தில் இருந்தது போலும்!

திருப்பாலைவனம் கோவிலில் சாதாரண விளக்குகள் 32 எரிக்கப்பட்டன; நந்தா விளக்குகள் 3 எரிக்கப்பட்டன; சந்தி விளக்குகள் 20 எரிக்கப்பட்டன; பாதி விளக்கு 1 எரிக்கப்பட்டது.

**2. திருநந்தவனம் :** திருப்பாலைவனம் கோவிலுக்கு 7 நந்தவனங்கள் ஏற்பட்டிருந்தன. அவற்றுள் மூன்றின் பெயர்கள் கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்டுள்ளன. அவை (1) பத்தர் சித்தத்து உறைவான் நந்தவனம், (2) ஐம்பத்தெழுவர் திருநந்தவனம், (3) ஆலாலசுந்தரம் திருநந்தவனம் என்பன. நந்தவனம் அமைக்க நிலம் தானமாக விடப்பட்டது. நந்தவனம் வைக்க விரும்புவோர் கோவில் நிலத்தையோ வேறு நிலத்தையோ அளந்து விலைக்கு வாங்கிக் கோவிலுக்கு விடுவர். திருப்பாலைவனத்தில் நிலத்தை யளக்க, (1) கண்டர் கண்டன் கோல், (2) வாழவந்தான் கோல் என்பவை வழக்கில் இருந்தன.

**3. நீராட்டல், பூசை முதலியன :** (1) குறித்த நாளில் அம்மையப்பர் சிலைகளைச் சிறப்பு முறையில் நீராட்டப் பணம் தானம் செய்யப்பட்டது; (2) பூசைக்கும் படையலுக்குமாக நிலம்தானம் செய்யப்பட்டது; (3) பூசைக்கும் நடுப்பகல் படையலுக்கும் காசுதானம் செய்யப்பட்டது; (4) உத்தராயண சங்கராந்தியில் பூசைக்கும் படையலுக்கும் ஐந்தேமுக்கால் கண்ட கோபாலன் மாடை தானம் செய்யப்பட்டது. (கண்ட கோபாலன் ஆட்சியில் அவன் பெயரால் வழங்கிய நாணயம் 'கண்ட கோபாலன் மாடை' எனப்பட்டது.)

**4. சிலைகள் எடுப்பித்தல்:** கோவிலில் காரைக்கால் அம்மையார் சிலை, சந்திரசேகரர்—உமாதேவியார் சிலை, ஆஞ்சநேயர் சிலை என்பவற்றை மக்கள் எடுப்பித்தனர். ஒருவன் முன்பே இருந்த நடராசர் சிலைக்குப் பீடம் வழங்கினான்.

**5. விழாக்கள் :** திருப்பாலைவனம் சிவன் கோவிலில் சித்திரை விழாவும் மார்கழித் திருவாதிரை விழாவும் நடைபெற்றன என்பது கல்வெட்டுக்களால் தெரிகின்றது. (1) இறைவன் இறைவி சிலைகளை மார்கழித் திருவாதிரையில்

நீராட்டவும், அவற்றுக்கு அமுது படைக்கவும், அன்று விழா நிகழ்த்தவும் திருப்பாலைவனத்தைச் சேர்ந்த ஒரு வணிகன் கண்ட கோபாலன் மாடை என்னும் பெயர் கொண்ட ஆறு நாணயங்களை அளித்தான். (2) பெரும்பேட்டு நிலத்தத்த மஞ்சி சபையாரிடம் பொற்கொல்லன் ஒருவன் சித்திரை விழாக் கொண்டாடப் பணம் கொடுத்தான். அச்சபையார் அப்பணத்திற்கு நிலத்தை வாங்கினர் ; அதன் வருவாயைக் கொண்டு ஆண்டுதோறும் சித்திரை விழாக் கொண்டாடினர்.

**6. மடங்கள் :** திருப்பாலைவனத்தில் மூன்று மடங்கள் இருந்தன என்பதைக் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. அவை (1) தன்ம தாவளன்[1] திருமடம், (2) கண்ட கோபால மாணிக்கமடம், (3) அன்பர்க்கு அடியார் மடம் என்பன. கண்ட கோபால மாணிக்கமடம் அடியார்களை உண்பித்தலும், நந்தவனத்தைப் பாதுகாத்தலும் ஆகிய செயல்களை மேற்கொண்டது. அன்பர்க்கடியார் மடத்தில் ஆண்டார்கள் இருந்தனர். அவர்கள் கோவிலில் இருந்த திருக்கோட்டி மண்டபத்தை மேற்பார்த்தனர் ; திருமுறை ஓதினர் ; பத்தர் சித்தத்து உறைவான் திருநந்தவனத்தை வளர்த்தனர்.

**7. மண்டபம் முதலியன :** (1) திருப்பாலைவனம் கோவில் கற்றளியாக்கப்பட்டது; (2) மகா மண்டபம் கட்டப்

---

1. கங்கைக்கும் நருமதைக்கும் இடைப்பட்ட 9 லட்சம் கிராமங்களைக் கொண்ட நாடு தாஹளநாடு எனப்பட்டது. அந்நாட்டில் கோளகிரி என்பது ஒரு மலை. அம்மலைப்பகுதியில் - சோணையாற்றங் கரையில் சத்பாவசம்பு என்பவரால் கி. பி. 940-இல் கோளகி மடம் அமைக்கப்பட்டது. அதற்கு 3 லட்சம் கிராமங்கள் சொந்தமாயிருந்தன. (வடநாட்டரசர் மரபின் வரலாறு, II, பக், 762 - 800) கோளகிமடத்துச் சிவாசாரியார் காலப்போக்கில் தென்னாட்டிலும் மடங்களை அமைத்துக்கொண்டு பரவினர். (சைவ சமய வளர்ச்சி, பக்கம். 221 - 224) தாஹள என்னும் பெயரே இங்குத் 'தாவள' என மாறி வழங்கப்பட்டிருக்கலாம். 'தன்ம தாஹள (தாவள) மடம்' என்பது, தாஹள நாட்டுச் சிவாசாரியர் மடம் என்று கருதுதல் தகும்.

பட்டது ; (3) கோவிற்படிகள் கட்டப்பட்டன ; (4) அம்மன் கோவில் பழுது பார்க்கப்பட்டது ; (5) கோவில் திருமதில் (சுந்தர பாண்டியன் திருமதில்) கட்டப்பட்டது.

## பிற செய்திகள்

(1) சுவாமியின் பெயர்—திருப்பாலீசுவரர் ; திருப்பாலை வனம் உடையார், அம்மை பெயர் – என்றும் பிரியாத நாச்சியார்.

(2) கோவிலுக்குச் சொந்தமாகப் பனையம்பாக்கம், திருப்பாலைவனம் என்னும் சிற்றூர்கள் இருந்தன. அவ்வூர் களுக்கு இருந்த வரிகளை மதுராந்தகப் பொத்தப்பிச் சோழன் என்ற விஜய கண்ட கோபாலன், நீக்கினன்.

(3) திருப்பாலைவனக் கோவிலில் தர்மகர்த்தர்கள் இருந்தனர் ; கோவிலதிகாரி ஸ்ரீ காரியம் பல்லவராயன் எனப்பட்டான். அவன்முன்பாக, நகரத்தார், பல மண்டலங் களைச் சேர்ந்த பரதேசிகள் ஆகியோர் கூடிய கூட்டத்தில் – மகமை வரிகள் கோவிலுக்கு விடப்படவேண்டும் என்னும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

(4) இன்று திருப்பாலைவனம் என்று அழைக்கப்படும் ஊரின் பெயர் அக்காலத்தில் கோவிலின் பெயராக இருந் திருக்கலாம் என்பது தெரிகிறது. "கோளூர்" நிலையிலுள்ள "திருப்பாற்றுறையில் உள்ள திருப்பாலைவன முடையார் கோவில்" என்பது கல்வெட்டு வாசகம். இதனால் கோளூர் என்னும் பேரூரின் ஒரு பகுதி திருப்பாற்றுறை என்பதும், திருப்பாலைவனம் என்பது கோவிலின் பெயர் என்பதும் இவ்வாசகத்தால் விளங்குகின்றன அல்லவா ?

(5) அக்காலத்தில் பழங்காசுகள், கண்ட கோபாலன் மாடை, புஜபலமாடை என்பன வழக்கில் இருந்தன. "பொதுவாக வழங்கும் காசு, பொன் என்பவற்றுடன் கண்ட கோபால மாடை, புஜபலமாடை போன்ற பொற்காசு களும் 12, 13 ஆம் நூற்றாண்டுகளில் திருப்பாலைவனம் பகுதியில் வழங்கின. இவற்றை வழங்கிய அரசர் யார் என்பதை உறுதியாகக் கூற இயலாது. ஆனால் அவை

மூன்றாம் குலோத்துங்கனது 21-ஆம் ஆட்சியாண்டில் வழக்கில் இருந்தன என்றுமட்டும் கூறுதல் இயலும். கண்ட கோபாலன் மாடை, விஜய கண்ட கோபாலன் ஆட்சிக் காலத்தில் வெளியிட்டவை. அவன் கி. பி. 1250-இல் ஆட்சி தொடங்கியவன் (A. R. E. 1920, Para 57). 'ஸ்ரீ புஜவ' என்னும் பெயர் கொண்ட நாணயங்கள் நெல்லூர் மாவட்டத் துக் கோடூரில் கிடைத்துள்ளன. இவை யாரைக் குறிப்பன என்பதைத் திட்டமாகக் கூறக் கூடவில்லை.''1

(6) நெல்லூர் மறவ சித்தீசுவரமுடைய நாயனார் கோவிலில் சித்த மாதேவியார் என்ற ஆடும்மகள் (நடன மகள்) இருந்தாள். அவளது உடன் பிறந்தவள் பனையாண்டை என்ற கண்ட கோபால மாணிக்கம் என்பவள். அவள் பெயரால் கண்ட கோபாலன், கண்ட கோபால மாணிக்க மடம் என்பதைத் திருப்பாலைவனத்தில் ஏற்படுத்தினான்.

(7) நாணயப்பரிசோதகன் சங்ககாலத்தில் வண்ணக்கன் எனப் பெயர் பெற்றான். வடமவண்ணக்கன் பேரிசாத்தனார் என்பவர் சங்ககாலப் புலவர். அவ்வலுவற் பெயர் சோழ ராட்சியிலும் தொடர்ந்து இருந்து வந்தது என்பது இக்கோவிற் கல்வெட்டுக்கள் இரண்டால் தெரிகிறது. விஜய கண்ட கோபால தேவரது 16-ஆம் ஆட்சி ஆண்டில் ஆரணி வண்ணக்கன் பேரம்பலக் கூத்தன் வேட்டையழகியான் என்பவன் ஒரு விளக்கெரிக்க ஆடுகள் தானம் செய்தான். திருக்காளத்தி தேவர் என்ற கண்ட கோபால தேவரது மூன்றாம் ஆட்சி ஆண்டில் ஆரணி வண்ணக்கன் காவுடை யான் சூரிய தேவன் என்பவன் கோவில் பூசைக்கு நிலதானம் செய்தான் என்று ஒரு கல்வெட்டுக் கூறுகிறது. இவ்விரண்டு கல்வெட்டுச் செய்திகளையும் நோக்க, வண்ணக்கன் என்ற அரசாங்க அலுவலன் பேரூர்களில் இருந்தனன் என்பது தெரிகிறது.

(8) ஜயங்கொண்ட சோழ மண்டலத்து மெய்க்குன்ற வளநாட்டு – பையூர்க் கோட்டத்துத் திருப்பாலைவனம்

1. A. R. E. 1929, Part II.

கோவிலுக்குச் சோழ மண்டலம், பாண்டி மண்டலம், திருமுனைப்பாடி நாடு இவற்றைச் சேர்ந்த மக்களும் தொண்டை மண்டலத்துப் பல கோட்டங்களைச் சேர்ந்த மக்களும் திருப்பணிகள் செய்தனர். அவருட் சிலர் தங்கள் தங்கள் ஊர்களில் இருந்த நிலங்களைக் கோவிலுக்கு எழுதுவித்தனர். எனவே, இக்கோவிலுக்குப் பல ஊர்களிலும் நிலங்கள் இருந்தன என்பது அறியத்தகும்.

(9) இக்கோவிலுக்குரிய நிலங்கள் கீழ்வரும் ஊர்களில் இருந்தன என்று கல்வெட்டுக்கள் கூறுகின்றன. திருச்சாந்துப்பட்டி, ஞாயிறு, பூவரம்பி, தத்தமஞ்சி, கோளூரைச் சேர்ந்த மெதுக்கூர் என்னும் கேரளாந்தகச் சதுர்வேதி மங்கலம், பையூர்க் கோட்டத்துப் பெரும்பேடு, பையூர்க் கோட்டத்து அளிநல்லூர்.

(10) கோவிலில் விளக்கெரிக்கப் பணம் உதவியவர்கள் விளக்குத் தண்டையும் கோவிலுக்குக் கொடுத்தனர் என்பதைச் சில கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

(11) மனைவியர் தங்கள் நலனுக்கும் தங்கள் கணவர் நலனுக்கும், கோவிலில் விளக்கெரித்தல் அக்கால வழக்கம். அமனி பாக்கிழான் மகளிர் தங்கள் நலனுக்கும் கணவர் நலனுக்கும் கோவிலில் விளக்கெரிக்க 8 பழங்காசுகளைக் கொடுத்தனர் என்பதை ஒரு கல்வெட்டுத் தெரிவிக்கின்றது.

(12) நிலத்திற்கு 'ஆலால சுந்தர விளாகம்' என்ற பெயர் இருந்தது.

(13) ஆண்டார் என்பவர் மலர் பறித்தல், அலகிடுதல், மெழுக்கிடுதல், திருவீதி தூய்மை செய்தல் ஆகிய கோவில் பணிகளைச் செய்வர் என்று கல்வெட்டுக்கள் கூறுகின்றன.[1] அன்பர்க்கடியார் மடத்தில் இத்தகைய ஆண்டார்கள் இருந்தார்கள். அவர்கள் இப்பணிகளோடு வேறு பணிகளையும் செய்தனர் என்பது மேலே குறிக்கப்பட்டதன்றோ?

(தொடரும்)

1. 350 of 1919; S. I. I. 7-97.

## அடியார் திருநட்சத்திர விழாக்கள்

16-3-60 : சென்னைப் பூக்கடை சென்னமல்லீசுவரர் கோயிலில் 'காரைக்காலம்மையார்' திருநட்சத்திர விழா நடைபெறும். கோவை-சிவக்கவிமணி-(C. K S.) தவத்திரு. சம்பந்த சரணாலயத் தம்பிரான் அவர்கள் இயற்றிய 'சேக்கிழாரும் சேயிழையார்களும்' என்ற நூல் வெளியீடும் செய்யப்பெறும்.

25-3-60 : தண்டியடிகள் நாயனர் : இராயப்பேட்டை - மீனாட்சிசுந்தரேசர் கோயில்

3-4-60 : நேசநாயனர், கணநாத நாயனர், மூர்த்தியடுவார் நாயனர் : இராயப்பேட்டை, ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபை. —கீ. இராமலிங்கம், எம்.ஏ., ஜி. கலியாணம், எம்.ஏ., சமாஜச் செயலர்கள்.

---

## செய்திச் சுருக்கங்கள்

குருபூசை: சிவத்திரு. ஞானியார் அடிகளின் குருபூசை, 11-2-60 வியாழன் அன்று திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயத்தில், சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி. அவர்கள் தலைமையில் சிறப்புற நிகழ்ந்தது. வைத்யரத்னம் டாக்டர் பு. வே. தேவராஜ முதலியார், குடந்தை சங்கீதம் ப. சுந்தரேசன் ஆகிய அறிஞர்கள் இருவரும் சொற்பொழிவாற்றினர்.

மாதாந்தரப் பிரசார வழிபாட்டுக் கூட்டம் : சென்னை தியாகராயநகர்த் தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலயத்தின் சார்பில் 6-3-60 ஞாயிறன்று திருக்கள்ளில் என்னும் தலத்தில் நடைபெற்றது. திருவாளர்கள் - ச. சச்சிதானந்தம் பிள்ளை, நல். முருகேச முதலியார், அ. சோமசுந்தரஞ் செட்டியார், க. வச்சிரவேலு முதலியார், ச. சிவகுமாரனர், புலவர் முருகவேள், கைவண்டூர் ராஜு முதலியார், சாரதி பிலிம்ஸ் இராமமூர்த்தி ஐயர் முதலிய பலர் கலந்து கொண்டனர். வழக்கம்போல மேயர் கம்பெனி திரு. மாசிலாமணி முதலியார் அவர்கள் சிற்றுண்டிகளும் பருகுநீரும் வழங்கினர். ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் இனியதொரு 'வாழ்த்துரை' நிகழ்த்தினர். திருக்கோயில் அறக்காவலர்கள் உடனிருந்து வழிபாடும் கூட்டமும் சிறப்புற நிகழத் துணைபுரிந்தனர்.

*Statement about ownership and other particulars about*

# "SIDDHANTAM"

| | | |
|---|---|---|
| 1. Place of Publication | ... | 14, Warren Road, Madras-4 |
| 2. Periodicity of its Publication | ... | Monthly |
| 3. Printers' Name | ... | D. Mangayarkarasi & V. K. Punithavathi |
| Nationality | ... | Indian |
| Address | ... | 15, Madhavaperumal Koil St., Mylapore, Madras-4 |
| 4. Publisher's Name | ... | S. Satchidanandam Pillai |
| Nationality | ... | Indian |
| Address | ... | 175-A, Lloyds Road, Madras-14 |
| 5. Editor's Name | ... | Pulavar Murugavel, M.A., M.O.L. |
| Nationality | ... | Indian |
| Address | ... | 47, Kothavalchavadi Street, Madras-15 |
| 6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital. | | "Saiva Siddhanta Mahasamajam" with no shareholders or partners, but only members paying subscriptions. ["Siddhantam" is not a newspaper.] |

I, S. Satchidanandam Pillai, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Signature of Publisher: (Sd.) S. Satchidanandam Pillai.

Dated. 10—3—'60.

Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.